


| | | |
|---|---|---|
| ஓம் | மஹோர்ஜிதாய நம: | பெரும் வலிமையுள்ளவர் |
| ஓம் | மாநநிதயே நம: | கௌரவப் புதையர் |
| ஓம் | மநோரதபலப்ரதாய நம: | விரும்பும் பலனைத் தருபவர் |
| ஓம் | மஹோதயாய நம: | புண்ணிய காலமாயிருப்பவர் |
| ஓம் | மஹாபுண்யாய நம: | பெரும் புண்ணியசாலி அவர் |
| ஓம் | மஹாபலபராக்ரமாய நம: | பெரும் பலபராக்கிரமமுடையவர் |
| ஓம் | மாநதாய நம: | கௌரவமளிப்பவர் |
| ஓம் | மதிதாய நம: | அறிவை வழங்குபவர் |
| ஓம் | மாலிநே நம: | மாலையணிந்தவர் 680 |
| ஓம் | முக்தாமாலாவிபூஷணாய நம: | முத்து மாலைகளாலலங்கரிக்கப்பட்டவர் |
| ஓம் | மநோஹராய நம: | எல்லோர் மனத்தையும் கவருபவர் |
| ஓம் | மஹாமுக்யாய நம: | மிகவும் மேலானவர் |
| ஓம் | மஹர்த்தயே நம: | பெரும் செல்வமுடையவர் |
| ஓம் | மூர்த்திமதே நம: | தெய்வ வடிவுடையவர் |
| ஓம் | முநயே நம: | துறவியானவர் |
| ஓம் | மஹோத்தமாய நம: | பெரும் உத்தமர் |
| ஓம் | மஹோபாயாய நம: | பெரும் யுக்தியுடையவர் |
| ஓம் | மோக்ஷதாய நம: | மோக்ஷமளிப்பவர் |
| ஓம் | மங்கலப்ரதாய நம: | நலனளிப்பவர் 690 |
| ஓம் | முதாகராய நம: | மகிழ்ச்சியளிப்பவர் |
| ஓம் | முக்திதாத்ரே நம: | முக்தியைக் கொடுப்பவர் |
| ஓம் | மஹாபோகாய நம: | பெருஞ்செல்வர் |
| ஓம் | மஹோரகாய நம: | பெரும் ஸர்ப்பமானவர் |
| ஓம் | யஸஸ்கராய நம: | புகழுக்குரியவர் |
| ஓம் | யோகயோநயே நம: | யோகத்துக்குப் பிறப்பிடம் அவர் |
| ஓம் | யோகிஷ்ட்டாய நம: | சிறந்த யோகாப்பியாஸர் |
| ஓம் | யமிநாம்வராய நம: | சிறந்த ஸந்யாஸி அவர் |
| ஓம் | யஸஸ்விநே நம: | புகழுடையவர் |
| ஓம் | யோகபுருஷாய நம: | த்யான புருஷர் 700 |
| ஓம் | யோக்யாய நம: | எல்லாவற்றிற்கும் பொருத்தமானவர் |
| ஓம் | யோகநிதயே நம: | யுக்திகுப் புதையலானவர் |
| ஓம் | யமிநே நம: | ஸன்யாஸியானவர் |
| ஓம் | யதிஸேவ்யாய நம: | ஸன்யாஸிகளால் துதிக்கப்பட்டவர் |
| ஓம் | யோக யுக்த்தாய நம: | யோகத்துடன் கூடியவர் |
| ஓம் | யோகவிதே நம: | யோகத்தை உணர்ந்தவர் |
| ஓம் | யோக ஸித்திதாய நம: | தியான நிறைவைத் தருபவர் |
| ஓம் | யந்த்ராய நம: | கருவியாயிருப்பவர் |
| ஓம் | யந்த்ரிணே நம: | கருவியையுடையவர் |
| ஓம் | யந்த்ரக்ஞாய நம: | கருவியையறிந்தவர் 710 |
| ஓம் | யந்த்ரவதே நம: | யந்திரமாயிருப்பவர் |
| ஓம் | யந்த்ரவாஹகாய நம: | யந்திரத்தைச் சுமப்பவர் |
| ஓம் | யாதநாரஹிதாய நம: | நரக வேதனையற்றவர் |







| | | |
|---|---|---|
| ஓம் | யோகிநே நம: | சிறந்த யோகியானவர் |
| ஓம் | யோகீஸாய நம: | யோகிகளுக்கு ஈசர் |
| ஓம் | யோகிநாம்வராய நம: | சிறந்த யோகியர் |
| ஓம் | ரமணீயாய நம: | அழகானவர் |
| ஓம் | ரம்யரூபாய நம: | அழகிய வடிவுடையவர் |
| ஓம் | ரஸக்ஞாய நம: | சுவையையறிந்தவர் |
| ஓம் | ரஸபாவநாய நம: | காவியச் சுவையையுணர்ந்தவர் 720 |
| ஓம் | ரஞ்ஜநாய நம: | மகிழ்விப்பவர் |
| ஓம் | ரஞ்ஜிதாய நம: | சந்தனச்சாந்து பூசியவர் |
| ஓம் | ராகிணே நம: | ஆசையுள்ளவர் |
| ஓம் | ருசிராய நம: | ஒளி நிறைந்தவர் |
| ஓம் | ருத்ரஸம்பவாய நம: | சிவனாரிடம் தோன்றியவர் |
| ஓம் | ரணப்ரியாய நம: | சண்டையில் ப்ரியமானவர் |
| ஓம் | ரணோதாராய நம: | போரில் பெரியவர் |
| ஓம் | ராகத்வேஷவிநாசநாய நம: | ஆசை, வெறுப்பு இவற்றையழிப்பவர் |
| ஓம் | ரத்நார்ச்சிஷேருசிராய நம: | நவரத்னார்ச்சனையில் விருப்பமானவர் |
| ஓம் | ரம்யாய நம: | அழகானவர் 730 |
| ஓம் | ரூபலாவண்யவிக்ரஹாய நம: | அழகிய வடிவமைப்புள்ளவர் |
| ஓம் | ரத்நாங்கத தராய நம: | ரத்தினத் தோள்வளையைத் தரிப்பவர் |
| ஓம் | ரத்நபூஷணாய நம: | ரத்தினாபரணங்களையுடையவர் |
| ஓம் | ரமணீயகாய நம: | மிகவும் அழகானவர் |
| ஓம் | ருசிக்ருதே நம: | ஊக்கமளிப்பவர் |
| ஓம் | ரோசமாநாய நம: | பிரகாசமானவர் |
| ஓம் | ரோகநாஸநாய நம: | நோயைப் போக்குபவர் |
| ஓம் | ராஜீவாக்ஷாய நம: | தாமரை போன்ற கண்ணுடையவர் |
| ஓம் | ராஜராஜாய நம: | பேரரசர் |
| ஓம் | ரக்தமால்யாநு லேபநாய நம: | சந்தனம், குங்குமம், பூமாலை இவற்றோடு கூடியவர் 740 |
| ஓம் | ராஜத்வேதாகமஸ்துத்யாய நம: | வேதாகமங்களால் துதிக்கப்படுபவர் |
| ஓம் | ரஜஸ்ஸத்வ குணாந்விதாய நம: | ரஜஸ், ஸத்வ குணங்களை உடையவர் |
| ஓம் | ரஜநீஸகலாரம்யாய நம: | சந்திரகலை போன்ற அழகானவர் |
| ஓம் | ரத்ந குண்டல மண்டிதாய நம: | ரத்தின காதணிகளால் அலங்கரிக்கப்பட்டவர் |
| ஓம் | ரத்ந ஸந்மௌளி ஸோபாட்யாய நம: | ரத்தினக் கிரீடத்தில் அதிக அழகுடன் விளங்குபவர் |
| ஓம் | ரணந்மஞ்ஜிரபூஷணாய நம: | ஒலிக்கும் கால்சதங்கைகளையுடையவர் |
| ஓம் | லோகைகநாதாய நம: | உலகத்திற்கு ஒரே தலைவர் |
| ஓம் | லோகேஸாய நம: | உலகங்களுக்கெல்லாம் ஈசர் |
| ஓம் | லலிதாய நம: | விளையாட்டில் பிரியமானவர் |
| ஓம் | லோக நாயகாய நம: | உலக நாயகர் 750 |




| | | | |
|---|---|---|---|
| ஓம் | லோக ரக்ஷயாய நம: | உலகைக் காப்பாற்றுபவர் | |
| ஓம் | லோக சிக்ஷாய நம: | உலகத்திற்குப் பாடம் புகட்டுபவர் | |
| ஓம் | லோகலோசநரஞ்ஜிதாய நம: | உலகோர் கண்களை மகிழ்விப்பவர் | |
| ஓம் | லோக பந்தவே நம: | உலகத்தார்க்கு உறவினர் | |
| ஓம் | லோக தாத்ரே நம: | உலகத்தை தாங்குபவர் | |
| ஓம் | லோகத்ரயமஹாஹிதாய நம: | மூவுலகுக்கும் மிக்க நன்மை செய்பவர் | |
| ஓம் | லோக சூடாமணயே நம: | உலகோருக்குச் சூடாமணியானவர் | |
| ஓம் | லோகவந்த்யாய நம: | உலகத்தாரால் வணங்கப்படுபவர் | |
| ஓம் | லாவண்யவிக்ரஹாய நம: | அழகிய உருவமுடையவர் | |
| ஓம் | லோகாத்யக்ஷாய நம: | எல்லாவுலகங்களுக்கும் தலைவர் | 760 |
| ஓம் | லீலாவதே நம: | காதல் விளையாட்டு விளையாடுபவர் | |
| ஓம | லோகோத்ர குணாந்விதாய நம: | உலகிலுள்ள உத்தம குணங்களோடு கூடியவர் | |
| ஓம் | வரிஷ்ட்டாய நம: | மிகவும் முக்கியமானவர் | |
| ஓம் | வரதாய நம: | வரமளிப்பவர் | |
| ஓம் | வந்த்யாய நம: | வணங்கத் தக்கவர் | |
| ஓம் | விசிஷ்ட்டாய நம: | மிக மேலானவர் | |
| ஓம் | விக்ரமாய நம: | சூரத்தனம் மிக்கவர் | |
| ஓம் | விபவே நம: | நம்மையெல்லாம் ஆளுபவர் | |
| ஓம் | விபுதாக்ரசராய நம: | தேவதைக்குள் முதல் தரமானவர் | |
| ஓம் | வஸ்யாய நம: | எவரையும் கவரக் கூடியவர் | 770 |
| ஓம் | விகல்ப்பலேக்கிதாய நம: | சந்தேகத்தையெல்லாம் விளக்குபவர் | |
| ஓம் | விபாஸாய நம: | பற்றற்றவர் | |
| ஓம் | விகதாதங்காய நம: | பீடையை அகற்றுபவர் | |
| ஓம் | விசித்ராங்காய நம: | ஆச்சர்யகரமான உடலையுடையவர் | |
| ஓம் | விரோசநாய நம: | ஒளி வழங்கும் சூரியர் | |
| ஓம் | வித்யாதராய நம: | தேவ யோனியானவர் | |
| ஓம் | விஸத்தாத்மநே நம: | தூய ஆத்மா அவர் | |
| ஓம் | வேதாங்காய நம: | வேதாங்கமாயிருப்பவர் | |
| ஓம் | விபுதப்ரியாய நம: | தேவப் பிரியர் | |
| ஓம் | வசஸ்கராய நம: | பேச்சு ஆற்றலுள்ளவர் | 780 |
| ஓம் | வ்யாபகாய நம: | எங்கும் வியாபித்தவர் | |
| ஓம் | விக்ஞாநிநே நம: | உலகியல் அறிவுடையவர் | |
| ஓம் | விநயாந்விதாய நம: | நல்லொழுக்கமுடையவர் | |
| ஓம் | வித்வத்தமாய நம: | சிறந்த புலவர் | |
| ஓம் | விரோதிக்நாய நம: | எதிரியை அழிப்பவர் | |
| ஓம் | வீராய நம: | வீர மிக்கவர் | |
| ஓம் | விகதராவதே நம: | ஆசையே இல்லாதவர் | |
| ஓம் | வீதபவாய நம: | பிறவியிலிருந்து விடுபட்டவர் | |
| ஓம் | விநீதாத்மநே நம: | அன்புள்ள ஆத்மா | |
| ஓம் | வேதகர்ப்பாய நம: | வேதத்தின் உட்பொருளானவர் | 790 |
| ஓம் | வஸுப்ரதாய நம: | மோக்ஷ செல்வத்தையளிப்பவர் | |





| | | |
|---|---|---|
| ஓம் | விஸ்வ தீப்தயே நம: | உலகத்திற்கே ப்ரகாசமானவர் |
| ஓம் | விஸாலாக்ஷாய நம: | அகண்டபெரிய கண்கள் உடையவர் |
| ஓம் | விஜிதாத்மநே நம: | மனத்தையடக்கியவர் |
| ஓம் | விபாவநாய நம: | உயர்ந்த த்யான சீலர் |
| ஓம் | வேத வேத்யாய நம: | வேதங்களால் உணரக்கூடியவர் |
| ஓம் | விதேயாத்மநே நம: | அடங்கிய ஸ்வரூபர் |
| ஓம் | வீததோஷாய நம: | தோஷமற்றவர் |
| ஓம் | வேதவிதே நம: | வேதத்தை உணர்ந்தவர் |
| ஓம் | விஸ்வகர்மணே நம: | உலகை அற்புதமாக அமைப்பவர் 800 |
| ஓம் | வீதபயாய நம: | அச்சத்தை அகற்றுபவர் |
| ஓம் | வாகீஸாய நம: | தேவகுருவாய் இருப்பவர் |
| ஓம் | வாஸவார்ச்சிதாய நம: | இந்திரனால் அர்ச்சிக்கப்பட்டவர் |
| ஓம் | வீரத்வம்ஸாய நம: | எதிரியின் வீரத்தையழிப்பவர் |
| ஓம் | விஸ்வமூர்த்தயே நம: | உலகை உடலாகக் கொண்டவர் |
| ஓம் | விஸ்வரூபாய நம: | ப்ரபஞ்ச வடிவினர் |
| ஓம் | வராஸநாய நம: | வரமளிக்கும் முகமுடையவர் |
| ஓம் | விஸாகாய நம: | விசாக நக்ஷத்திரப் பிரியர் |
| ஓம் | விமலாய நம: | நிர்மலமானவர் |
| ஓம் | வாக்மிநே நம: | நல்ல பேச்சாற்றல் உள்ளவர் 810 |
| ஓம் | விதுஷே நம: | கற்றறிந்தவர் |
| ஓம் | வேததராய நம: | வேதத்தைத் தரிப்பவர் |
| ஓம் | வடவே நம: | ப்ரம்மசாரியர் |
| ஓம் | வீரசூடாமணியே நம: | வீரர்களுள் தலைசிறந்தவர் |
| ஓம் | வீராய நம: | வீரர் (போர்வீரர்) |
| ஓம் | வித்யேஸாய நம: | கல்விக் கடவுளர் |
| ஓம் | விபுதாஸ்ரயாய நம: | தேவதைக்கு ஆதாரமாயிருப்பவர் |
| ஓம் | விஜயிநே நம: | வெற்றி வீரர் |
| ஓம் | விநயிநே நம: | அடக்கமுள்ளவர் |
| ஓம் | வேத்ரே நம: | முனிவராயிருப்பவர் 820 |
| ஓம் | வரீயஸே நம: | எல்லாவற்றும் மிக மேன்மையவர் |
| ஓம் | வீரஜாய நம: | வீரத்தை உண்டாக்குபவர் |
| ஓம் | வஸவே நம: | உயிருக்கு இருப்பிடமாயிருப்பவர் |
| ஓம் | வீரக்நாய நம: | அரக்க வீரத்தையழித்தவர் |
| ஓம் | விஜ்வராய நம: | வெப்பத்தைத் தணிப்பவர் |
| ஓம் | வேத்யாய நம: | அறியத்தக்கவர் |
| ஓம் | வேகவதே நம: | ப்ரதாபமுள்ளவர் |
| ஓம் | வீர்யவதே நம: | ஸாமர்த்யமுள்ளவர் |
| ஓம் | வசிநே நம: | சுதந்திரமானவர் |
| ஓம் | வரஸிலாய நம: | வரம் மிக அளிப்பவர் 830 |
| ஓம் | வரகுணாய நம: | உயர்ந்த குணமுள்ளவர் |
| ஓம் | விஸோகாய நம: | சோகமில்லாதவர் |
| ஓம் | வஜ்ரதாரகாய நம: | வஜ்ராயுதத்தை உடையவர் |



| | | | |
|---|---|---|---|
| ஓம் | ஸரஜந்மநே நம: | நீரில் பிறப்பையுடையவர் | |
| ஓம் | ஸக்திதராய நம: | சத்தியாயுதத்தை உடையவர் | |
| ஓம் | ஸத்ருக்நாய நம: | பகைவர்களையழிப்பவர் | |
| ஓம் | ஶிகிவாஹநாய நம: | மயில் வாஹனர் | |
| ஓம் | ஸ்ரீமதே நம: | அழகு (ஐஸ்வர்யம்) உடையவர் | |
| ஓம் | ஶிஷ்ட்டாய நம: | திரிகரண சுத்தியுள்ளவர் | |
| ஓம் | ஶுசயே நம: | தூய்மையானவர் | 840 |
| ஓம் | ஶுத்தாய நம: | சுத்தமானவர் | |
| ஓம் | ஸாஸ்வதாய நம: | நிரந்தரமானவர் | |
| ஓம் | ஸ்ருதிஸாகராய நம: | வேதங்களின் கடலானவர் | |
| ஓம் | ஸரண்யாய நம: | எல்லார்க்கும் புகலிடமானவர் | |
| ஓம் | ஶுபதாய நம: | க்ஷேமத்தைத் தருபவர் | |
| ஓம் | ஸர்மணே நம: | சுகவாசியானவர் | |
| ஓம் | ஶிஷ்டேஷ்டாய நம: | ஞானிகளுக்குப் பிரியமானவர் | |
| ஓம் | ஶுபலக்ஷணாய நம: | நல்ல லக்ஷணமுடையவர் | |
| ஓம் | ஸாந்தாய நம: | சாந்த குணமுள்ளவர் | |
| ஓம் | ஶூலதராய நம: | சூலாயுதத்தைத் தரிப்பவர் | 850 |
| ஓம் | ஸ்ரேஷ்டாய நம: | மிக உயர்ந்தவர் | |
| ஓம் | ஶுத்தாத்மநே நம: | தூய ஆத்மாவானவர் | |
| ஓம் | ஸங்கர ப்ரியாய நம: | சிவபெருமானுக்குப் பிரியமானவர் | |
| ஓம் | ஶிவாய நம: | மங்களகரமானவர் | |
| ஓம் | ஶிதிகண்டாத்மஜாய நம: | சிவபெருமானின் மைந்தர் | |
| ஓம் | ஶூராய நம: | சூரர் | |
| ஓம் | ஸாந்திதாய நம: | மன அமைதி அளிப்பவர் | |
| ஓம் | ஸோகநாஸநாய நம: | அடியார்களின் சோகத்தையழிப்பவர் | |
| ஓம் | ஷாண்மாதுராய நம: | ஆறுதாய்மார்கள் கொண்டவர் | |
| ஓம் | ஷண்முகாய நம: | ஆறு முகங்களுள்ளவர் | 860 |
| ஓம் | ஷட்குணைஸ்வர்ய ஸம்யுதாய நம: | குணங்கள் ஆறையும் செல்வமாக உடையவர் | |
| ஓம் | ஷட்சக்ரஸ்த்தாய நம: | உடலிலுள்ள மூலாதாரமாகிய ஆறுசக்ரங்களில் இருப்பவர் | |
| ஓம் | ஷடூர்மிக்நாய நம: | பீடைகளையழிப்பவர் | |
| ஓம் | ஷடங்கஸ்ருதிபாரகாய நம: | வேத, வேதாந்தங்கள் உணர்ந்தவர் | |
| ஓம் | ஷட்பாவரஹிதாய நம: | பிறவிகள் ஆறுமில்லாதவர் | |
| ஓம் | ஷட்காய நம: | ஆறு என்னும் எண் கொண்டவர் | |
| ஓம் | ஷட்ஸாஸ்த்ர ஸம்ருதிபாரகாய நம: | ஆறு சாஸ்திரங்கள் வேதங்கள் இவற்றைக் கரைகண்டவர் | |
| ஓம் | ஷட்வர்கதாத்ரே நம: | நல்ல சேர்க்கையைத் தருபவர் | |
| ஓம் | ஷட்க்ரீவாய நம: | ஆறு கழுத்துக்களையுடையவர் | |
| ஓம் | ஷடரிக்நாய நம: | அறுவகைப்பகைவர்களை அழிப்பவர் | 870 |
| ஓம் | ஷடாஸ்ரயாய நம: | ஆறு எண்ணுக்கு ஆஸ்ரயமானவர் | |










| | | |
|---|---|---|
| ஓம் | ஷட்கிரீடதராயஶ்ரீமதே நம: | ஆறு கிரீடங்களையும் தரித்தவர் |
| ஓம் | ஷடாதாராய நம: | ஆறு எண்ணுக்கு ஆதாரமானவர் |
| ஓம் | ஷட்க்ரமாய நம: | ஆறு சக்திகளையுடையவர் |
| ஓம் | ஷட்கோணமத்யநிலயாய நம: | அறுகோணமையத்தில் இருப்பவர் |
| ஓம் | ஷண்டத்வபரிஹாரகாய நம: | அலித்தன்மையை அகற்றுபவர் |
| ஓம் | ஸேநாத்யே நம: | படைத் தலைவர் |
| ஓம் | ஸுபகாய நம: | பாக்யசாலியானவர் |
| ஓம் | ஸ்கந்தாய நம: | துள்ளிக் குதிப்பவர் |
| ஓம் | ஸுராநந்தாய நம: | தேவர்களுக்கு மகிழ்ச்சி தருபவர் 880 |
| ஓம் | ஸதாங்கதயே நம: | நல்லவர்களுக்குத் துணையானவர் |
| ஓம் | ஸுப்ரஹ்மண்யாய நம: | ப்ரம்மத்தை நன்கு சார்ந்திருப்பவர் |
| ஓம் | ஸுராத்யக்ஷாய நம: | தேவர்களுக்கு முதல் அதிகாரர் |
| ஓம் | ஸர்வக்ஞாய நம: | எல்லாம் அறிந்தவர் |
| ஓம் | ஸர்வகாய நம: | எங்கும் செல்பவர் |
| ஓம் | ஸுகிநே நம: | சுகமுடையவர் |
| ஓம் | ஸுலபாய நம: | எளிதில் அடையப்படுபவர் |
| ஓம் | ஸித்திதாய நம: | சித்திகளைத் தருபவர் |
| ஓம் | ஸௌம்யாய நம: | இனிமையானவர் |
| ஓம் | ஸித்தேஸாய நம: | சித்தர்களுக்கெல்லாம் ஈசர் 890 |
| ஓம் | ஸித்திஸாதநாய நம: | சித்திகளைச் சாதிப்பவர் |
| ஓம் | ஸித்தார்த்தாய நம: | பக்தர் விருப்பம் நிறைவேற்றுபவர் |
| ஓம் | ஸித்தஸங்கல்பாய நம: | சாதிக்கும் மன வலிமையுள்ளவர் |
| ஓம் | ஸித்த ஸாதவே நம: | ஸாதுக்களுக்கு நல்லவர் |
| ஓம் | ஸுரேஸ்வராய நம: | தேவர்களுக்கு ஈசர் |
| ஓம் | ஸுபுஜாய நம: | நல்ல தோள்களையுடையவர் |
| ஓம் | ஸர்வத்ருஸே நம: | எல்லாரையும் காண்பவர் |
| ஓம் | ஸாக்ஷிணே நம: | எல்லாவற்றிற்கும் சாட்சியானவர் |
| ஓம் | ஸுப்ரஸாதாய நம: | நன்கு அனுக்ரஹம் புரிபவர் |
| ஓம் | ஸநாதநாய நம: | பழமையானவர் 900 |
| ஓம் | ஸுதாபதயே நம: | அழியாத் தலைவர் |
| ஓம் | ஸ்வயம்ஜ்யோதிஷே நம: | ஸ்வயம் ப்ரகாசர் |
| ஓம் | ஸ்வயம்புவே நம: | தாமாகத் தோன்றியவர் |
| ஓம் | ஸர்வதோமுகாய நம: | எங்கும் ஸான்னித்யம் உள்ளவர் |
| ஓம் | ஸமர்த்தாய நம: | திறன் உள்ளவர் |
| ஓம் | ஸத்க்ருதயே நம: | நற்செயல் புரிபவர் |
| ஓம் | ஸுக்ஷ்மாய நம: | நுட்பமானவர் |
| ஓம் | ஸுகோஷாய நம: | வேதங்களால் கோஷிக்கப்படுபவர் |
| ஓம் | ஸுகதாய நம: | நல்லலோருக்குச்சுகம் கொடுப்பவர் |
| ஓம் | ஸுஹ்ருதே நம: | சிறந்த மனமுள்ளவர் 910 |
| ஓம் | ஸுப்ரஸந்நாய நம: | மிகவும் மகிழ்ச்சிகரமானவர் |
| ஓம் | ஸுரஸ்ரேஷ்டாய நம: | தேவர்களுள் சிறந்தவர் |
| ஓம் | ஸுஸிலாய நம: | நல்லோழுக்கமே வடிவெடுத்தவர் |








| | | | |
|---|---|---|---|
| ஓம் | ஸத்வஸாயகாய நம: | ஸத்வகுணத்தை அம்பாகயுடையவர் | |
| ஓம் | ஸம்பாவ்யாய நம: | கௌரவிக்கப்படுபவர் | |
| ஓம் | ஸுமநஸே நம: | நல்ல மனமுள்ளவர் | |
| ஓம் | ஸேவ்யாய நம: | வணங்கப்படுபவர் | |
| ஓம் | ஸகலாகமபாரகாய நம: | ஆகமங்களையும் கரை கண்டவர் | |
| ஓம் | ஸுவ்யக்தாய நம: | நன்கு (பிரகாசம்) வெளிப்படை அவர் | |
| ஓம் | ஸச்சிதாநந்தாய நம: | ஸச்சிதானந்த ஸ்வரூபர் | 920 |
| ஓம் | ஸுவீராய நம: | நல்ல வீரர் | |
| ஓம் | ஸுஜநாஸ்ரயாய நம: | நல்லவர்களால் அடையப்படுபவர் | |
| ஓம் | ஸர்வலக்ஷணஸம்பந்நாய நம: | தெய்வீக லக்ஷணங்களைப் பெற்றவர் | |
| ஓம் | ஸத்யதர்மபராயணாய நம: | ஸத்ய தர்மத்தில் தீவிரமானவர் | |
| ஓம் | ஸர்வதேவமயாய நம: | எல்லாக் கடவுள் மயமானவர் | |
| ஓம் | ஸத்யாய நம: | உண்மை வடிவினர் | |
| ஓம் | ஸதாம்ருஷ்ட்டாந்த தாயகாய நம: | அடியார்களுக்கு எப்போதும் உணவு அளிப்பவர் | |
| ஓம் | ஸுதாபிநே நம: | அமிருதத்தைப் பருகச் செய்பவர் | |
| ஓம் | ஸுமதயே நம: | நல்ல புத்தி உடையவர் | |
| ஓம் | ஸத்யாய நம: | உண்மைப் பொருள் அவர் | 930 |
| ஓம் | ஸர்வவிக்நவிநாசநாய நம: | அடியாரின் விக்னமதை அழிப்பவர் | |
| ஓம் | ஸர்வதுக்கப்ரஸமநாய நம: | துக்கங்களைத் தணிப்பவர் | |
| ஓம் | ஸகுமாராய நம: | அழகிய இளைஞர் | |
| ஓம் | ஸுலோசநாய நம: | அழகிய கண்களையுடையவர் | |
| ஓம் | ஸுக்ரீவாய நம: | அழகிய கழுத்தினையுடையவர் | |
| ஓம் | ஸுத்ருதயே நம: | மனவுறுதி வாய்க்கப் பெற்றவர் | |
| ஓம் | ஸாராய நம: | வேதத்தின் ஸாரமானவர் | |
| ஓம் | ஸுராராத்யக்ஷாய நம: | தேவர்களால் ஆராதிக்கப்படுபவர் | |
| ஓம் | ஸுவிக்ரமாய நம: | பேராற்றல் உள்ளவர் | |
| ஓம் | ஸுராரிக்நாய நம: | பகை அசுரர்களைக் கொல்பவர் | 940 |
| ஓம் | ஸ்வர்ணவர்ணாய நம: | தங்க நிறமானவர் | |
| ஓம் | ஸர்ப்பராஜாய நம: | பாம்பரசர் | |
| ஓம் | ஸதாஸுசயே நம: | எப்போதும் தூயவர் | |
| ஓம் | ஸப்தார்ச்சிர்ப்புவே நம: | அக்னியிலிருந்து தோன்றியவர் | |
| ஓம் | ஸுரவராய நம: | சிறந்த தேவர் | |
| ஓம் | ஸர்வாயுதவிஸாரதாய நம: | ஆயுதம் ப்ரயோகிக்கக் கூடியவர் | |
| ஓம் | ஹஸ்த்திசர்மாம்பர ஸுதாய நம: | யானைத் தோலணிந்த சிவபொருமானின் மைந்தர் | |
| ஓம் | ஹஸ்த்திவாஹத ஸேவிதாய நம: | ஐராவத வாஹனனான இந்திரனால் வணங்கப்படுபவர் | |
| ஓம் | ஹஸ்த்தசித்ராயுததராய நம: | கையில் பலவித ஆயுதம் தரிப்பவர் | |
| ஓம் | ஹ்ருதாகாய நம: | பக்தரின் பாபத்தைக் களைபவர் | 950 |
| ஓம் | ஹஸிதாநநாய நம: | சிரித்த முகமுடையர் | |
| ஓம் | ஹரித்வர்ணாய நம: | பச்சை நிறமுடையவர் | |










| | | | |
|---|---|---|---|
| ஓம் | ஹ்ருஷ்ட்டிதாய நம: | மகிழ்ச்சியைத் தருபவர் | |
| ஓம் | ஹ்ருஷ்ட்டிவர்த்தநாய நம: | அடியாரின் மகிழ்வை வளர்ப்பவர் | |
| ஓம் | ஹேமாத்ரிபிதே நம: | தங்க மலையைப் பிளந்தவர் | |
| ஓம் | ஹம்ஸரூபாய நம: | பரப்பிரம்ம ஸ்வரூபர் | |
| ஓம் | ஹுங்காரஹதகில்பிஷாய நம: | ஹுங்காரத்தால் அரக்கரை அழித்தவர் | |
| ஓம் | ஹிமாத்ரிஜாதாதநுஜாய நம: | ஹிமவான்மகள் பார்வதியின் மைந்தர் | |
| ஓம் | ஹரிகேஸாய நம: | மஞ்சள் நிறமுடியுடையவர் | |
| ஓம் | ஹிரண்மயாய நம: | தங்க நிறமானவர் | 960 |
| ஓம் | ஹ்ருத்யாய நம: | மனோஹரமானவர் | |
| ஓம் | ஹ்ருஷ்ட்டாய நம: | களிப்புடையவர் | |
| ஓம் | ஹரிஸகாய நம: | திருமாலின் நண்பர் | |
| ஓம் | ஹம்ஸாய நம: | பரம்பிரம்மம் அவர் | |
| ஓம் | ஹம்ஸகதயே நம: | யோகிகளுக்கு துணையானவர் | |
| ஓம் | ஹவிஷே நம: | ஹோமத் திரவ்யமாயிருப்பவர் | |
| ஓம் | ஹிரண்யவர்ணாய நம: | தங்க நிறமுடையவர் | |
| ஓம் | ஹிதக்ருதே நம: | அண்டினவர்களுக்கு நலம் புரிபவர் | |
| ஓம் | ஹர்ஷதாய நம: | யாவர்க்கும் மகிழ்ச்சி தருபவர் | |
| ஓம் | ஹேமபூஷணாய நம: | தங்க நகைகளை அணிந்தவர் | 970 |
| ஓம் | ஹரப்ரியாய நம: | சிவனாருக்குப் பிரியமானவர் | |
| ஓம் | ஹிதகராய நம: | உலகிற்கு நலமே செய்பவர் | |
| ஓம் | ஹதபாபாய நம: | அடியாரின் பாபம் போக்குபவர் | |
| ஓம் | ஹரோத்பவாய நம: | சிவனிடமிருந்து தோன்றியவர் | |
| ஓம் | க்ஷேமதாய நம: | எல்லார்க்கும் க்ஷேமமளிப்பவர் | |
| ஓம் | க்ஷேமக்ருதே நம: | பக்தரின் க்ஷேமம் கவனிப்பவர் | |
| ஓம் | க்ஷேம்யாய நம: | மங்களமயமானவர் | |
| ஓம் | க்ஷேத்ரக்ஞாய நம: | பரம்பொருள் அவர் | |
| ஓம் | க்ஷாமவரர்ஜிதாய நம: | பஞ்சத்தைப் போக்குபவர் | |
| ஓம் | க்ஷேத்ரபாலாய நம: | பூமியைக் காப்பவர் | 980 |
| ஓம் | க்ஷமாதாராய நம: | பூமியைத் தாங்குபவர் | |
| ஓம் | க்ஷேமக்ஷேத்ராய நம: | அமைதியளிக்கும் இடமானவர் | |
| ஓம் | க்ஷமாகராய நம: | பொறுமையைத் தருபவர் | |
| ஓம் | க்ஷீத்ரக்நாய நம: | அற்பகுணத்தை அழிப்பவர் | |
| ஓம் | க்ஷாந்திதாய நம: | பொறுமையை அளிப்பவர் | |
| ஓம் | க்ஷேமாய நம: | மங்களமானவர் | |
| ஓம் | க்ஷிதிபூஷாய நம: | பூமியை அலங்கரிப்பவர் | |
| ஓம் | க்ஷமாஸ்ரயாய நம: | பூமிக்கு ஆதாரமானவர் | |
| ஓம் | க்ஷாளிதாகாய நம: | அடியாரின் பாபம் அழிப்பவர் | |
| ஓம் | க்ஷிதிதராய நம: | பூமியைத் தரிப்பவர் | 990 |
| ஓம் | க்ஷீணஸம்ரக்ஷண க்ஷமாய நம: | நலிந்தவர்களைக் காப்பதில் வல்லவர் | |
| ஓம் | க்ஷணபங்குர ஸந்நத்தகநஸோபி | நொடியில் அழியத்தயாராயுள்ள மேகத்தின் மின்னல் போன்று | |







| | | |
|---|---|---|
| | கபர்தகாய நம: | ஒளிர்பவர் |
| ஓம் | க்ஷிதிப்ருந்நாததநயா முக பங்கஜ பாஸ்கராய நம: | பர்வத ராஜகுமாரி முகத்தாமரை மலரச் செய்யும் சூரியர் |
| ஓம் | க்ஷிதாஹிதாய நம: | பக்தரின் கேட்டைப் போக்குபவர் |
| ஓம் | க்ஷிராய நம: | பக்தர்களுக்காக உருகுபவர் |
| ஓம் | க்ஷிந்த்ரே நம: | பொறுமைசாலி அவர் |
| ஓம் | க்ஷிததோஷாய நம: | குற்றங்களை அகற்றியவர் |
| ஓம் | க்ஷிமாநிதயே நம: | பொறுமைக் கடலானவர் |
| ஓம் | க்ஷிாலிதாகில ஸந்தாபாய நம: | அண்டினவர் எல்லோரின் மன நோயைப் போக்கினவர் |
| ஓம் | க்ஷிபாநாத ஸமாநநாய நம: | சந்திரனுக்கு நிகரான முகத்தோற்றம் உடையவர் 1000 |

ஓம் பவஸ்ய தேவஸ்யஸுதாய நம: ஓம் ருத்ரஸ்ய தேவஸ்யஸுதாய நம:
ஓம் சர்வஸ்ய தேவஸ்யஸுதாய நம: ஓம் உக்ரஸ்ய தேவஸ்யஸுதாய நம:
ஓம் ஈசாநஸ்ய தேவஸ்யஸுதாய நம: ஓம் பீமஸ்ய தேவஸ்யஸுதாய நம:
ஓம் பசுபதேர் தேவஸ்யஸுதாய நம: ஓம் மஹதோ தேவஸ்யஸுதாய நம:

(மேலே உள்ள 8 நாமங்களையும்
அஷ்டோத்ர ஸத நாமத்திற்குப் பிறகும் கூறவேண்டும்)

ஓம் ஸ்ரீ வல்லி தேவஸேநா ஸமேத ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய ஸ்வாமிநே நம:
ஓம் ஸ்ரீ வல்லி, தேவஸேநையுடன் கூடிய ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய ஸ்வாமிக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய ஸஹஸ்ரநாமம் ஸம்பூர்ணம்



## நல்ல மனம் வேண்டும்

மகாபாரதத்தில் வரும் நந்திதேவன் என்ற மன்னனின் கதை நம்மில் பலருக்குத் தெரிந்திருக்காது. அந்த மன்னன் காட்டுக்குச் சென்று தவம் செய்தான். நாற்பத்தொன்பது நாட்களுக்குப் பிறகு இறைவன் அவன் முன்னால் தோன்றி, "உனக்கு என்ன வேண்டும்? கேள், உன் ராஜ்யத்தைவிட பெரிய ராஜ்யம் வேண்டுமா?" என்று கேட்க, "வேண்டாம்" என்கிறான் நந்திதேவன். "ஞானிகள் விருமபுகிற பிறவாத வரம் வேண்டுமா?" என்று இறைவன் கேட்க அதற்கும் "வேண்டாம்" என்கிறான் மன்னன். "அப்படியென்றால் சொர்கத்தில் இடம் வேண்டுமா?" என்று இறைவன் கேட்க மன்னன் "அதெல்லாம் வேண்டாம், அடுத்தவர் துன்பத்தைப் பார்த்தால் பதைபதைத்து அவர்களுக்கு உதவ நினைக்கும் மனதை எப்போதும் எனக்குக் கொடு" என்றான்.

அந்த ஈரமனதை இறைவன் அந்த மன்னனுக்கு மட்டுமல்ல நம் எல்லோருக்குமே கொடுத்திருப்பதாக நம்புவோமாக...



# முருகன் துதி

வேலவா வேலவா வேல்முருகா வா வா
வேல் முருகா வா வா
வடிவேல் முருகா வா வா
வேலவா ஷண்முகா முருகா முருகா

வள்ளி மணாளா குஞ்சரி மணாளா
தேவ குஞ்சரி மணாளா
வண்ண மயில் வாஹனா முருகா முருகா

சூராதி சூரனை சூரனையா
சுப்ரமண்ய தெய்வமையா - பால
ஷண்முகா சரவணா முருகா முருகா வேலவா





# முருகன் அழைப்பு

இராகம் - நீலமணி தாளம் - ஆதி
இயற்றியவர் - அணையாம்பட்டி ஆதிசேஷய்யர்

என்ன கவி பாடினாலும்
உந்தன் உள்ளம் இரங்கவில்லை
இன்னும் என்ன சோதனையோ (முருகா) (எந்த, என்ன)

அன்னையும் அறியவில்லை
தந்தையோ நினைப்பதில்லை
உன் மாமியும் பார்ப்பதில்லை
மாமனோ கேட்பதில்லை

சரணம்

அக்ஷர லக்ஷம் தந்த
அன்னை போஜ ராஜனில்லை
பக்ஷமுடனே அழைத்து
பரிசளிக்க யாருமில்லை
இக்ஷணத்தில் நீ நினைத்தால்
எனக்கோர் குறையில்லை முருகா
லக்ஷியமோ நான் உனக்கு (அலக்ஷியமோ உனக்கு)
உன்னை நான் விடுவதில்லை

**கடன்**

உலகத்தில் மனிதனுக்கு வந்திருக்கிற நோய்களில் மிகவும் கொடூரமானது எது தெரியுமா? நிச்சயமாக கேன்சரோ அல்லது மற்றதோ அல்ல. கடன் ! இந்த மூன்றெழுத்து கொண்ட விஷக்கிருமியால் மனிதனுக்கு ஏற்படுகின்ற மனமாற்றம் இருக்கிறதே, அதுதான் மிகவும் கொடூரமான நோய்.

ஆம். கடன் என்பது ஒரு அடித்தளமில்லாத கடல் ...



# அம்பாள் பாமாலை

இராகம் - செஞ்சுருட்டி, புன்னாகவராளி,
நாதநாமக்ரியா, சிந்துபைரவி
இயற்றியவர் - அகஸ்தியர்

ஸ்ரீ சக்ர ராஜ சிம்ஹாஸனேஸ்வரி
ஸ்ரீ லலிதாம்பிகையே புவனேஸ்வரி

ஆகம வேத கலாமய ரூபிணி
அகில சராசர ஜனனி நாராயணி
நாக கங்கண நடராஜ மனோஹரி
ஞான வித்வேஸ்வரி ராஜ ராஜேஸ்வரி

பலவிதமாய் உன்னை பாடவும் ஆடவும்
பாடிக்கொண்டாடும் அன்பர் பதமலர் சூடவும்
உலகம் முழுதுமென தகமுறக் காணவும்
ஒரு நிலை தருவாய் காஞ்சி காமேஸ்வரி (ஸ்ரீ சக்ர)

உழன்று திரிந்த என்னை உத்தமனாக்கி வைத்தாய்
உயரிய பெரியோருடன் ஒன்றிடக் கூட்டிவைத்தாய்
நிழலென தொடர்ந்த முன் ஊழ் கொடுமையை நீங்கச் செய்தாய்
நித்ய கல்யாணி பவானி பத்மேஸ்வரி (ஸ்ரீ சக்ர)

துன்பப் புடத்திலிட்டு தூயவனாக்கி வைத்தாய்
தொடர்ந்த முன்மாயம் நீக்கி பிறந்த பயனைத் தந்தாய்
அன்பைப் புகட்டி உந்தன் ஆடலைக் காணச் செய்தாய்
அடைக்கலம் நீயே அம்மா அகிலாண்டேஸ்வரி (ஸ்ரீ சக்ர)

**தொண்டு**

ஆலயமணி தலைகவிழ்ந்து உள்ளது.
ஆனால் அதன் நாதம் தொலைதூரம் கேட்கிறது.
அதுபோல அடக்கமாகச் செய்யப்படும் தொண்டு நெடுங்காலம் பயன்தரும்.



# அம்பாள் அழகு

இராகம் - சிந்துபைரவி
இயற்றியவர் - உளுந்தூர்பேட்டை ஷண்முகம்

சின்னஞ்சிறு பெண்போலே . . . . சிற்றாடை இடை உடுத்தி
சிவகங்கை குளத்தருகே . . . . . ஸ்ரீதுர்கை சிரித்திருப்பாள்

பெண்ணவளின் கண்ணழகை . . பேசி முடியாது
பேரழகிற் கிணையாக . . . . . . . வேறொன்றும் கிடையாது

மின்னலைப் போல மேனி . . . . அன்னை சிவகாமி
இன்பம் எல்லாம் தருவாள் . . . . நெஞ்சமெல்லாம் நிறைவாள்

பின்னல் சடை போட்டு. . . . . . . பிச்சிப்பூ சூடிடுவாள்
பித்தனுக்கு இணையாக . . . . . நர்த்தனம் ஆடிடுவாள்

## பணிவு எப்போது வேண்டும்?

மிகப்பெரிய கடல்.
கடலருகே செல்கின்றோம்.
கடல் தனது அலையாகிய அன்புக் கரங்களை நீட்டிப்
பணிந்து காலைத் தொட்டு வணங்குகிறது.
அதேநேரம் மிகப்பெரிய கடலே நம்மைப் பணிகின்றது என்ற இறுமாப்புடன்
கடலினூடே சென்றால் விளைவு விபரீதமாகும்.

அதைப்போலவே பெரியோர் நம்மைப் பணிந்து நிற்கும் தறுவாயில்
அவர்களை மதியாமல் அவர்களினூடே சென்றால், விளைவு ...!

**RESPECT ELDERS ALWAYS !...**



# தெம்மாங்கு



ரோஜாப்பூ கொண்டு வந்தே - எங்கள்
ராஜேஸ்வரியை பூஜை செய்தால்
தேசாதி தேசம் எங்கும் ஒரு
ராஜாப் போல் வாழச் செய்வாள்



முல்லைப்பூ கொண்டு வந்தே எங்கள்
மோகனாங்கியை பூஜை செய்தால்
இல்லை என்று சொல்லாமலே அவள்
அள்ளி அள்ளி தந்திடுவாள்



மருக்கொழுந்து கொண்டு வந்தே எங்கள்
மனோன் மணியை பூஜை செய்தால்
திருக்கோலம் கொண்டு அங்கே
அவள் தினந்தோறும் வந்துநிற்பாள்



ஜாதிப்பூ கொண்டு வந்தே எங்கள்
ஜோதி அவளை பூஜை செய்தால்
ஓதி உணரா வித்தையெல்லாம் தந்து
மேதை என்றாக்கி விடுவாள்



மகிழம்பூ கொண்டு வந்தே எங்கள்
மாதங்கியை பூஜை செய்தால்
மண மாகாத கன்னியர்க்கு திருமணமும்
நடத்தி வைப்பாள்



தாழம்பூ கொண்டு வந்தே எங்கள்
தாட்சாயணியை பூஜை செய்தால்
வாழைப் பெண்ணை நாதனுடன் அவள்
வாழும் படியாய் செய்திடுவாள்



பத்ரம் பலகொண்டு வந்தே எங்கள்
பகவதியை பூஜை செய்தால்
சித்திரைப் போல உள்ளவர்க்கு அவள்
புத்ரபாக்கியம் தந்திடுவாள்

தாமரைப் பூ கொண்டுவந்தே எங்கள்
சியாமளியை பூஜை செய்தால்
தாமதம் செய்யாமலே அவள்
தாலிப்பிச்சை தந்திடுவாள்



மல்லிகைப் பூ கொண்டுவந்தே எங்கள்
மகேஸ்வரியை பூஜை செய்தால்
பில்லி சூன்யம் ஏவல் எல்லாம்
அவள் பின்னாலே ஓடச் செய்வாள்





செண்பகப் பூ கொண்டுவந்தே எங்கள்
அம்பிகையை பூஜை செய்தால்
ஜென்மாந்திர பாவமெல்லாம் அவள்
தீர்த்து விலக்கி ஓட்டிடுவாள்



பாரி ஜாதம் கொண்டு வந்தே எங்கள்
பார்வதியை பூஜை செய்தால்
அளவில்லாத செல்வத்தை அவள்
அகமகிழ தந்திடுவாள்

அரளிப் பூ கொண்டுவந்தே எங்கள்
அபிராமியை பூஜை செய்தால்
அளவில்லாத செல்வத்தை அவள்
அகமகிழ தந்திடுவாள்



செம்பரத்தை கொண்டு வந்தே எங்கள்
சண்டிகையை பூஜை செய்தால்
தந்திரமாய் நம் கனவில் வந்து
அவள் அந்தரங்கம் சொல்லிடுவாள்





மாதுளம் பூ கொண்டுவந்தே எங்கள்
மாதாவை பூஜை செய்தால்
மங்கல வாழ்வு தந்து அவள்
மனமகிழ செய்திடுவாள்



மருதாணிப் பூ கொண்டுவந்தே எங்கள்
மீனாட்சியை பூஜை செய்தால்
மாறாத மனத் துடனே பக்தி
பாடல்களை பாடச் செய்வாள்

பத்திரிப்பூ கொண்டுவந்தே எங்கள்
திரௌபதியை பூஜை செய்தால்
அருள் சூர்ந்து நம்முள்ளே அவள்
அனுக்ரஹமும் செய்திடுவாள்



நீலாம் பரம் கொண்டுவந்தே எங்கள்
நீலாய தாட்சியை பூஜை செய்தால்
நித்யானந்தம் கொண்டு உலகில்
நித்ய வாசம் செய்திடுவாள்





மனோரஞ்சிதம் கொண்டு வந்தே எங்கள்
மாலினியை பூஜை செய்தால்
கனமான சுகந்தமுடன் அவள்
மணம்போல வீசச் செய்வாள்



சம்பங்கப் பூ கொண்டு வந்தே எங்கள்
சர்வேஸ்வரியை பூஜை செய்தால்
சகல சௌபாக்கியம் தந்து அவள்
சஞ்சலத்தை நீக்கிடுவாள்

சாமந்திப் பூ கொண்டு வந்தே எங்கள்
சங்கரியை பூஜை செய்தால்
சத்தியமாய் வாழ்வினிலே அவள்
சந்தோஷத்தை அளித்திடுவாள்



தும்பைப் பூ கொண்டு வந்தே எங்கள்
துர்கையை பூஜை செய்தால்
தரித்திரத்தை துரத்தி அவள்
தனதான்யம் பொழிந்திடுவாள்





மந்தாரப் பூ கொண்டு வந்தே எங்கள்
லலிதாம்பிகையை பூஜை செய்தால்
பந்த பாசம் ஆசை நீக்கி அவள்
வந்தனங்கள் செய்திடுவாள்



வெட்டி வேர்ப்பூ கொண்டுவந்தே எங்கள்
புவனேஸ்வரியை பூஜை செய்தால்
மட்டில்லாத மகிழ்சசியுடன் அவள்
கட்டாயமாய்க் கிட்டிடுவாள்

கதிர்ப்பச்சை கொண்டுவந்தே எங்கள்
காமாட்சியை பூஜை செய்தால்
கடைக்கண்ணால் கடாட்சிக்க ஜன்மம்
கடைத்தேறச் செய்திடுவாள்



கருமாரி சாம்பல் பெற்றால்
கண்ட பிணி ஓடிவிடும்
இடைஞ்சல்கள் மாறி இன்பம்
நம் இல்லத்தை நாடி வரும்

## அரும்பாக்கம் ஸ்ரீதுர்கை



அரும்பாக்கம் வளர்துர்க்கை மகாசக்தி
ஆனந்த ரூபிணி பவானியே
அம்புஜலோசனி அஞ்சுக பாணினி
அனுதினம் சொல்வோம் உன்திருநாமம்

கரும்பைக் கையினில் வைத்திருப்பவளே
காரணி நாரணி பூரணியே
இரும்பை ஒத்த எங்களின் இதயம்
இளகியே உந்தனை ஏற்றிட வேண்டும்

இத்திரை மீதினில் எங்களின் ஊரும்
ஈடிலா ஏற்றம் பெற்றிட வேண்டும்
முத்தமிழ் ஓதி உந்தனைப் பணிவோம்
முந்தைய வெல்வினை போக்கிடு தாயே

நிலமும் நீரும் செழிப்புற வேண்டும்
நீள் செல்வம் என்றும் நிலைத்திட வேண்டும்
நலமுடன் மக்கள் வாழ்ந்திட வேண்டும்
நாவிற் கலைமகள் தங்கிட வேண்டும்

மழலை நன்றாய் வளர்ந்திட வேண்டும்
மங்கையர் மங்கலம் ஓங்கிட வேண்டும்
சங்கொடு சக்கரம் ஏந்துவாள் சோதரி
இங்கெமக்கருள் வாய் ராஜ ராஜேஸ்வரி

செம்பவளத் திருமேனியிலே எங்கள்
சிந்தை மயங்கியே நிற்குதம்மா
அம்புவிதனிலே ஆனந்தமாய் எங்கள்
அரும்பாக்கம் உறை ஸ்ரீஹரி சோதரி



## லக்ஷ்மியே ...

பாற்கடலில் வந்துதித்த பாக்யலக்ஷ்மியே
பரந்தாமன் மார்பில் வாழும் மஹாலக்ஷ்மியே
தாமரையில் வீற்றிருக்கும் தனலக்ஷ்மியே
தயவுடன் பசி தீர்த்தருளும் தான்யலக்ஷ்மியே
வீரமளித்து வெற்றிதரும் விஜயலக்ஷ்மியே
வேண்டும் மக்கள்செல்வம் தரும் சந்தானலக்ஷ்மியே
ஐஸ்வர்யம் எல்லாம் அளிக்கும் கஜலக்ஷ்மியே
அரசபோக வாழ்வளிக்கும் அன்னலக்ஷ்மியே
ஜோதிலக்ஷ்மியே சொர்ணலக்ஷ்மி சுபலக்ஷ்மியே
நாகலக்ஷ்மி போகலக்ஷ்மி யோகலக்ஷ்மியே
சித்தலக்ஷ்மி கோலோக ராதாலக்ஷ்மியே
சொர்கலக்ஷ்மி மோக்ஷ சாம்ராஜ்யலக்ஷ்மியே

# திருவிளக்கே



திருவிளக்கே திருவிளக்கே
தேவி பராசக்தி திருவிளக்கே
தேவியின் வடிவே திருவிளக்கே
லக்ஷ்மி உனக்கு நமஸ்காரம்

இருளை அகற்றும் திருவிளக்கே
இன்பம் அளிக்கும் திருவிளக்கே
எங்கும் ஒளிதரும் திருவிளக்கே
சங்கரி உனக்கு நமஸ்காரம்

மங்கள ஜோதியாம் திருவிளக்கே
மாலையில் ஒளி தரும் திருவிளக்கே
காலையில் ஒளிதரும் திருவிளக்கே
காமாட்சி உனக்கு நமஸ்காரம்

அஷ்டலக்ஷ்மி வடிவே திருவிளக்கே
ஆனந்த நர்த்தகி திருவிளக்கே
தெள்ளிய ஜோதி திருவிளக்கே
தேவியே உனக்கு நமஸ்காரம்



அஷ்டலக்ஷ்மி வடிவே திருவிளக்கே
ஆனந்த நர்த்தகி திருவிளக்கே
ஆலய பூஷணி திருவிளக்கே
ஆதிபராசக்தி நமஸ்காரம்

பாக்கியலஷ்மியின் திருவிளக்கே
பக்தியை அளிக்கும் திருவிளக்கே
பதவியைத் தந்திடும் திருவிளக்கே
ஜகமெல்லாம் விளங்கும் திருவிளக்கே
ஜகதீஸ்வரி வடிவே திருவிளக்கே
அழகை அளிக்கும் திருவிளக்கே
அம்மா உனக்கு நமஸ்காரம்

சௌபாக்கிய ரூபிணி திருவிளக்கே
ஸந்தான பலன்தரும் திருவிளக்கே
சக்தியே உனக்கு நமஸ்காரம்
அரும்பாக்கம் ஆதிபராசக்தியே நமஸ்காரம்

# எங்கள் அம்மா .. மாரியம்மா!



சமயபுரத்தாளே மாரியம்மா - அம்மா
சங்கரியே எங்கள் முன்னே வாருமம்மா
மல்லிகைச் சரம்தொடுத்து
மாலையிட்டோம்-அரிசி
மாவிளக்கு ஏற்றிவைத்து பொங்கலிட்டோம்

துள்ளியே எங்கள் முன்னே வாருமம்மா - அம்மா
தூயவளே எம் தாயே மாரியம்மா - அம்மா
பட்டுப் பீதாம்பரத்தில் தாவணியாம் - உனக்கு
பாவாடை சேலைகளும் கொண்டு வந்தோம்

எட்டுத் திசைகளிலும் கண்டோமே - அம்மா
ஈஸ்வரியே என் தாயே மாரியம்மா

கத்திக் கதறுகிறோம் கேட்கலையோ தாயே
கல்லேதான் உன் மனமும் கரையலையோ

உலகமே ஆடுதம்மா உன் சிரிப்பிலே - எங்கள்
உமையவளே எம் தாயே மாரியம்மா

காலில் சலங்கை ஒலி காதைத் துளைக்குதம்மா
பாவாடை தாவணியும் தானாக ஆடுதம்மா

பூவாடை வீசுதம்மா பூமகளே - உனக்குப்
பாமாலை கொண்டு வந்தோம் பாருமம்மா



# ஸரஸ்வதி

பைங்கமலத்தாள் பணிந்தேன் ஸரஸ்வதி
பார்த்தருள வேண்டுமம்மா ஸரஸ்வதி
எங்கும் நிறைந்திருப்பவளே ஸரஸ்வதி
ஈசுவரியே பாரதியே ஸரஸ்வதி
ஈசுவரியே பாரதியே ஸரஸ்வதி

கருணை உள்ளம் கொண்டவளே ஸரஸ்வதி
காத்தருள வேண்டுமம்மா ஸரஸ்வதி
கருத்தினில் உறைபவளே ஸரஸ்வதி
கவலைகள் போக்கிடுவாய் ஸரஸ்வதி

வெள்ளைக் கமல மீதமர்ந்தாய் ஸரஸ்வதி
வீணைதனை கையில் கொண்டாய் ஸரஸ்வதி
வேண்டும் வரம் தந்திடுவாய் ஸரஸ்வதி
வேதம் போற்றும் நாயகியே ஸரஸ்வதி

விஜயதசமி நாள் தனிலே ஸரஸ்வதி
வேண்டி உனை துதிப்பவர்க்கு ஸரஸ்வதி
வித்யை எல்லாம் அளித்திடுவாய் ஸரஸ்வதி
வெற்றிகளைக் குவித்திடுவாய் ஸரஸ்வதி



# தாலேலோ ... ஆராரோ

ஆயர்பாடி மாளிகையில் தாய்மடியில் கன்றினைப் போல்
மாய கண்ணன் தூங்குகின்றான் தாலேலோ
அவன் வாய் நிறைய மண்ணை உண்டு
மண்டலத்தைக் காட்டியபின்
ஓய்வெடுத்துத் தூங்குகிறான் தாலேலோ

பின்னலிட்ட கோபியரின் கன்னத்திலே கன்னமிட்ட
மன்னவன் போல் லீலை செய்தான் தாலேலோ
அந்த மந்திரத்தில் அவர் உறங்க மயக்கத்திலே இவர் உறங்க
மண்டலமே உறங்குதம்மா ஆராரோ

நாகப்படம் மீது அவன் நர்த்தனங்கள் ஆடியதில்
தாபமெல்லாம் தீர்த்துக் கொண்டான் தாலேலோ
அவன் மோகநிலைகூட ஒரு யோகநிலை போலிருக்கும்
யார் அவரை தூங்கவிட்டார் ஆராரோ

கண்ணனவன் தூங்கிவிட்டால் காற்றினிலே தூங்கிவிடும்
அன்னையரே துயிலெழுப்ப வாரீரோ
அவன் பொன்னழகைப் பார்ப்பதற்கும்
கோதை முத்தம் பெறுவதற்கும்
கன்னியரே கோபியரே வாரீரோ



# முருகனுக்கு வாகனங்கள் மூன்று

## மயில்

சுப்ரமண்ய ஸ்வாமிக்கு இரண்டு மயில் சொல்வார்கள். குழந்தை நாளிலிருந்தே அவருக்கு மயில்வாஹனம் உண்டு. பின்னர் சூரசம்ஹாரம் முடிந்தபிறகு அந்த சூரனையும் மயிலாக்கி வாஹனமாக்கிக் கொண்டார்.



முருகனுக்கு வலது பக்கம் சிரசும், இடதுபக்கம் தோகையுமாக இருப்பது, அவருக்கு ஆதியிலிருந்தே அவருக்கென்று ஏற்பட்ட தெய்வீகமான மயில் என்பார்கள்.



பகவானுக்கு இடது பக்கத்தில் மயிலின் சிரசும் வலது பக்கம் தோகை வாலுமாக இருப்பது சூரனிலிருந்து மயில் ஆன வாஹனம்.

## யானை



திருமாகர் என்னும் க்ஷேத்திரத்தில் யானை மீது முருகன் காட்சி அளிக்கிறார்.

திருத்தணி, சுவாமிமலை, உத்திரமேரூர் ஆகிய ஸ்தலங்களில் முருகனுக்கு யானை வாஹனம் இருப்பதைப் பார்க்கலாம்.



## ஆடு

அசுரர்கள் செய்த ஒரு யாகத்திலிருந்து உண்டான ஒரு செம்மறி ஆடு, மேலும மேலும வளர்ந்துகொண்டும் அதிக சக்தியையும் அடைந்து வரும் தன்மை பெற்று, உலகையே பயமுறுத்திக்கொண்டே வந்தது. அதை அடக்கி, தன் முதல் வாஹனமாக்கிக் கொண்டார் முருகன். திருமலைக்கோயிலில் ஆட்டுக்கடா முருகனின் வாஹனமாகக் காட்சி தருகிறது.

# பதினொரு முகமுள்ள முருகன்

தென்காசியில் திருக்குற்றாலத்திலிருந்து மூன்று கிலோமீட்டர் தூரத்தில் இலந்தி என்னும் ஸ்தலம் அமைந்திருக்கிறது. இங்கு இலந்தை மரத்தின் அடியில் விஷ்ணு பிரத்தியக்ஷமாகக் காட்சி தந்தமையால், இந்த ஊருக்கு இலந்தி என்னும் இப்பெயர் ஏற்பட்டது.

இலந்திக்குமரன் (முருகன்) ஆணைப்படி அகத்தியர் முருகனுக்கு பதினொரு முகத்துடன் சிலை அமைத்து வழிபட்டார்.

**புண்ணியம் தான்!**

ஏதாவது ஒரு வகையில் மற்றவர்களுக்கு தினமும் ஒரு உதவி செய்வது உத்தமமான செயலாகும். மெனக்கெட்டுப் போய் தினம் யாருக்காவது உதவி செய்யவேண்டும் என்பது கூட இல்லை; தெருவில் கிடக்கும் ஆணிகள், கண்ணாடித்துண்டுகள் யார் காலிலும் குத்தாமல் இருகக, அதைத் தூர எறிந்தால்கூடப் புண்ணியம் தான்!

- ஸ்ரீ சங்காராச்சாரியார்



# சரணம் ஐயப்பா

ஹரிவராஸனம் விஸ்வமோஹனம்
ஹரிததீஸ்வரம் ஆராத்யபாதுகம்
அரிவிமர்த்தனம் நித்யநர்த்தனம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா

1. சரணகீர்த்தனம் பக்தமானஸம்
பரணலோலுபம் நர்த்தனாலஸம்
அருணபாசுரம் பூதநாயகம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

2. ப்ரணயஸத்யகம் ப்ராணநாயகம்
ப்ரணத கல்பகம் சுப்ரபாஞ்சிதம்
ப்ரணவமந்திரம் கீர்த்தனப்ரியம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

3. துரகவாஹனம் சுந்தரானனம்
வரகதாயுதம் வேதவர்ணிதம்
குருக்ருபாகரம் கீர்த்தனப்ரியம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே



4. த்ரிபுவனார்ச்சிதம் தேவதாத்மகம்
த்ரிநயனம்ப்ரபும் திவ்யதேசிகம்
த்ரிதசபூஜிதம் சிந்திதப்ரதம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

5. பவபயாபஹம் பாவுகாகவம்
புவனமோஹனம் பூதிபூஷணம்
தவளவாஹனம் திவ்யவாரணம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

6. களம்ருது ஸ்மிதம் சுந்தரானனம்
களபகோமளம் காத்ரமோஹனம்
களபகேசரீ வாஜிவாஹனம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

7. ச்ரிதஜனப்ரியம் சிந்திதப்ரதம்
ச்ருதிவிபூஷணம் ஸாதுஜீவனம்
ச்ருதிமனோஹரம் கீதலாலஸம்
ஹரிஹராத்மஜம் தேவமாச்ரயே

# மங்களம்

பஞ்சாத்ரீசுவர மங்களம்
ஹரிஹரப்ரேமாக்ருதே மங்களம்
பிஞ்சாலம் க்ருதமங்களம்
ப்ரணமதாம் சிந்தாமணே மங்களம்

பஞ்சாஸ்ய துவஜ மங்களம்
த்ரிஜகதாம் ஆத்ய ப்ரபோ மங்களம்
பஞ்சாஸ்த்ரோதப மங்களம்
ச்ருதி சிரோலங் காரஸன் மங்களம்



# குறை ஒன்றும் இல்லை

இயற்றியவர்
மூதறிஞர் ராஜாஜி

ராகம் - சிவரஞ்சனி

குறை ஒன்றுமில்லை மறைமூர்த்தி கண்ணா
குறை ஒன்றுமில்லை கண்ணா ...
குறை ஒன்றுமில்லை கோவிந்தா ... (2)
கண்ணுக்குத் தெரியாமல் நிற்கின்றாய் கண்ணா
கண்ணுக்குத் தெரியாமல் நின்றாலும் எனக்கு
குறை ஒன்றுமில்லை மறைமூர்த்தி கண்ணா ...
வேண்டியதைத் தந்திட வேங்கடேசன் நின்றிருக்க
வேண்டியது வேறில்லை மறைமூர்த்தி கண்ணா
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா

ராகம் - காபி

திரையின்பின் நிற்கின்றாய் கண்ணா கண்ணா...
திரையின்பின் நிற்கின்றாய் கண்ணா - உன்னை
மறை ஓதும் ஞானியர் மட்டுமேகாண்பார் (2)
என்றாலும் குறை ஒன்றும் எனக்கில்லை கண்ணா ...

குன்றின்மேல் கல்லாகி நிற்கின்ற வரதா (2)
குறை ஒன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா (2)
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா

ராகம் - சிந்து பைரவி

கலிநாளுக்கிரங்கி கல்லிலே இறங்கி
நிலையாகக் கோயிலில் நிற்கின்றாய் கேசவா (2)
குறை ஒன்றும் இல்லை மறைமூர்த்தி கண்ணா
யாரும் மறுக்காத மலையப்பா ...
யாரும் மறுக்காத மலையப்பா ... - உன் மார்பில்
ஏதும் தர நிற்கும் கருணைக்கடல் அன்னை
என்றும் இருந்திட ஏது குறை எனக்கு
என்றும் இருந்திட ஏது குறை எனக்கு
ஒன்றும் குறை இல்லை மறைமூர்த்தி கண்ணா
ஒன்றும் குறை இல்லை மறைமூர்த்தி கண்ணா
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா கோவிந்தா கோவிந்தா ....